ஸ்ரீ :

# ஸ்தல மாஹாத்மியம்





## ஸ்ரீ ரங்கநாதஸ்வாமி தேவாலயமும், வரலாறும்

ஸ்ரீரங்கப்பட்டணம் மற்றும் மைசூர் ராஜ்யத்திலுள்ள இதர முக்கியமான ஸ்தலங்களும்

Published by :
S. NARASIMHA RANGAN, Srirangapatna Rs 3 / 00

 1992

ஸ்ரீ:

# ஸ்ரீ ரங்கநாதப் பெருமாளின் மாஹாத்மியம்

ஸ்ரீவைகுண்டத்திலுள்ள விரஜா நதியின் புண்ணிய தீர்த்தத்திற்கு சமானமான பெருமையுடையது காவிரிநதி தீர்த்தம், ஸ்ரீ ரங்கநாதருடைய தேவாலயம் ஸ்ரீ வைகுண்டமேதான். ஸ்ரீவைகுண்டத்திலுள்ள வாசுதேவபெருமாள்தான் ஸ்ரீ ரங்கநாதர், ஸ்ரீ எம்பெருமான் இப்பரத கண்டத்தின் தென்பகுதியில் மூன்றிடங்களில் எழுந்தருளியிருக்கிறார். கீழ்த்திசையில் ஸ்ரீரங்கத்திலும், தென்திசையில் அநந்தசயனத்திலும், மேற்றிசையில் ஸ்ரீரங்கப்பட்டிணத்திலுமாவார். இம்மூன்று க்ஷேத்திரங்களிலும் எழுந்தருளியுள்ள திருவுருவங்கள் இயற்கையாகவே தோன்றியுள்ள சுயம்பு மூர்த்திகளாவர். அதாவது மனிதர்களால் உண்டாக்கப்பட்டவையல்ல. தானுகவே தோன்றியுள்ளவை.

மேற்றிசையில் ஸ்ரீரங்கநாதப்பெருமாள் எழுந்தருளியுள்ள ஸ்ரீரங்கப்பட்டிணம் பிரம்மா, ருத்திரர் முதலிய தேவர்களாலும், நித்தியசூரிகளாலும், சனகர், கபிலர் முதலான ரிஷிகளா-லும், மிகப்பெரிய புண்ணிய க்ஷேத்திரமாகக் கருதப்படுகிறது.

ஆதிசேஷனில் சயனம் கொண்டுள்ள ஸ்ரீரங்கநாதப் பெருமாளை நோக்கி ஸ்ரீரங்கப் பட்டணத்தில் காவிரிநதி பாய்கின்ற முக்கூடலில் காவிரிதேவியார் முன்னொரு காலத்தில் தவம்

செய்தாள் எம்பெருமான் அவள் தவத்திற்கு மெச்சி மூன்று வரங்களைத் தந்தருளினர் ஒன்று கங்கா நதியைவிட காவிரிநதியானவள் மிகுந்த புனிதத்தன்மையுடையவளாகட்டும். இரண்டு ஸ்ரீரங்கப்பட்டணம் பல புண்ணியவான்கள் யாத்திரை செய்யும் புண்ணிய க்ஷேத்திரமாகட்டும் மூன்று : தன்னுடைய பக்தர்களுக்கு இஷ்டவரங்களைத் தந்தருளுவதற்கு தானே இங்கேயே எழுந்தருளவதென்றும் வரமளித்தார். அப்பொழுது ஸ்ரீரங்கநாதப்பெருமாளை காவிரியானவள் பூஜித்தாள். ஆதிசேஷனில் சயனம் கொண்டுள்ள ரூபத்தில் ஸ்ரீ ரங்கநாதப்பெருமாள் சிலையாக எழுந்தருளச் செய்தார். அப்புண்ணியத் திருவுருவத்தை தரிசனம் செய்ய ஸ்ரீ லட்சுமிதேவி யானவள் காவிரிதேவியுடன் எழுந்தருளி எம்பெருமானின் பிரபாவங்களை உணர்ந்தவளாய் காவிரியில் ஸ்நானம் செய்து எம்பெருமானை பூஜித்த பிறகு அப்பெருமாளின் தென்கிழக்கு மூலையில் தானும் ஒரு கற்சிலையாக எழுந்தருளியுள்ளார்.

இப்புண்ணியஸ்தலத்தின் மகிமையை உணர்ந்த பிரம்மா ருத்திரன் முதலான தேவர்கள் யாவரும் அங்குவந்து எம்பெருமானை பூஜித்தார்கள். பிரம்மதேவன் எம்பெருமானுக்கும், பிராட்டிக்கும் தேவாலயம் கட்டுவித்தான். எல்லா தேவர்களும் வணங்கினர்கள். ஸ்ரீரங்கநாதப் பெருமாளை பூஜித்துவழிபடுவதற்காக பிரம்மதேவனானவன் நாரத மகா முனிவருக்குபாஞ் சராத்திர வழிபாட்டுமுறையை ஓதியருளினன். பிரம்மதேவனல் நாரதமகாமுனிவருக்குத் தெரிவிக்கப்பட்ட இந்த ஸ்தல மகாத்மியம் மிக்க பெருமை உடையது.

இந்தப் பூவுலகத்தில் இந்த ஸ்தலத்திற்கு ஒப்பான மகிமை வேறு எந்த க்ஷேத்திரத்திற்குமில்லை. எல்லா க்ஷேத்திரங்களுக்குள்ளும் இது மிக்க பெருமையுடையது. இதற்குச் சமமான க்ஷேத்திரம் முற்காலத்திலும் கிடையாது. இனியும் இருக்கமுடியாது

முன்னொரு காலத்தில் இந்த தேசத்தில் கொடுமையான பஞ்சம் ஏற்பட்டு, குளிப்பதற்குக் கூட தண்ணீர் இல்லாமல் ரிஷிகள் முதலானவர்கள் கஷ்டப்பட்டார்கள். அவர்கள் தங்களுடைய நித்திய கர்மானுஷ்டானங்களைச் செய்வதற்கு வேண்டிதகுந்த இடத்தைத்தேடிக் கொண்டு வரும் வழியில்கோதாவரி நதிக்கரையில் வாசம் செய்துகொண்டிருந்த கௌதமரிஷியின் பர்ணசாலைக்கு வந்துசேர்ந்தார்கள். மகரிஷிகள் வருகையை மிகவும் சந்தோஷத்தோடு கௌதம முனிவர் வரவேற்று தன்னுடைய ஆசிரமத்தில் இன்னும் சில காலம் தங்கும்படி வேண்டிக் கொண்டார். அவர்களும் அதற்குச் சம்மதித்து தங்கினார்கள். கோதாவரி நதிக்குப் போகும் பொழுது வழியில் தன்னுடைய சிஷ்யர்களைக்கொண்டு நெல் விதைகளை விதைத்தார். தன் அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு தன் ஆசிரமத்திற்குத் திரும்பினார், இதற்குள் ஏற்கனவே பயிராகியிருந்த தானியங்களைக் கொண்டுவந்து குத்தி அரிசியாக்கி ருசி மிகுந்த உணவு சமைத்து, வந்திருந்த அதிதிகளுக்குப் பரிமாறினார்கள்.

தங்களுக்கு இப்படிப்பட்ட உயர்ந்த ருசிகரமானவிருந்து உணவு பரிமாறியதைக் கண்ட ஒரு சிலரிஷிகள் கௌதம ரிஷியினிடம் பொறாமைகொண்டார்கள். தாங்கள் அந்த ஆசிரமத்திலேயே தங்கிவிட வேண்டுமென்ற அபிலாஷையினால் அந்த இடத்தைவிட்டு கௌதம ரிஷியைத் துரத்தி

விடுவதென்று அவர்கள் தீர்மானித்தார்கள். அவர்களுடைய தபோ வலிமையினுல் மறுநாள் அவர்கள் ஒரு பசுவை சிருஷ்டித்து அந்த தானியப் பயிர்கள் யாவற்றையும் மேயும்படி செய்தார்கள். கௌதம ரிஷியானவர் நதீதீரத்திலிருந்து திரும்பி வரும்பொழுது தானிய வயல்களில் பசு மேய்வதைக்கண்டு, தன் சிஷ்யர்களை அழைத்து அதை விரட்டச்செய்தார்.

சிஷ்யர்களும் அவ்வாரே செய்யும்பொழுது அந்தப் பசுவானது மிகவேகமாக ஓடிப்போய் கௌதம ரிஷியின் காலடியில் விழுந்து இறந்துபோனது. அங்கு தங்கியிருந்த ரிஷிகள் யாவரும் உரத்த குரலில் கௌதம ரிஷிதான் அந்தப்பசுவைக்கொன்றுவிட்டதாகக் கூச்சல் போட்டார்கள் அங்கு தங்கியிருந்த ரிஷிகள்தான் இப்பசுவை சிருஷ்டித்து இந்தச் செயல் செய்தவர்கள் என்பதைத்தெரிந்து கொண்ட கௌதம ரிஷியானவர்.மிகுந்த கோபங்கொண்டு, வேதநெறிக்குப் புறம்பான காரியங்களைச் செய்ததற்காக அவர்களைக் கெட்டவர்களாகவும் கொடியவர்களாகவும் போகும்படி சபித்தார்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு அவர் யாத்திரைக்குப் புறப்பட்டுவிட்டார். போகும் வழியில் திருவரங்கத்தை அடைந்தார். அங்கு எழுந்தருளியுள்ள ஸ்ரீரங்கப்பெருமாளைத் தியானித்தார். எம்பெருமான் அவர்முன் வெளிப்பட்டுத்தோன்றி விபீஷன் ஆழ்வார் தனக்குப்பணிவிடைசெய்த இடம் ஸ்ரீரங்கம் என்றும் கௌதம மகரிஷி அந்தப் புண்ணிய க்ஷேத்திரத்தை தரிசிக்க வேண்டுமென்றும், தான் அந்த இடத்தில் ஆதிரங்கனுய்த் தோன்றியுள்ளதாகவும் தெரிவித்தருளினுர் அதன்படி ஸ்ரீரங்கநாதப்பெருமாள் தெரிவித்த புண்ணியஸ்தலத்தைத் தேடிக்கொண்டு புறப்

பட்டார். தேடிப்போகும் வழியில் தாம்ரபரணி நதியையும், மகேந்திரகிரியையும் சஹ்யாத்ரி மலையையும், காவிரிநதி உற்பத்தி தீரத்தையும் கண்டு தரிசித்தார். பிறகு பல மகரிஷிகளுடன் ஸ்ரீரங்கப்பெருமாள் தெரிவித்துள்ள புண்ணிய க்ஷேத்திரத்தை வந்து அடைந்தார்.

ஒருமுறை தன்னுடன் கூடியிருக்கும் மகரிஷிகளுக்கு ஸ்ரீரங்கநாதப்பெருமாளின் பெருமை யையும், மகிமையையும் பற்றிக் கூறிக் கொண்டிருக்கும்பொழுது தற்செயலாக போதாயனர் அத்திரி, யாக்ஞவல்கியர், கண்ணுவர், சுகர், பராசரர் முதலான மகரிஷிகள் அங்குவந்து சேர்ந்தார்கள். அவர்களுடைய வருகைக்கு கௌதமர் மிகவும் சந்தோஷமடைந்த அவர்களை வரவேற்றார். அவர்கள் யாவரும் கௌதமரின் தலைமையில் ரங்கநாதப்பெருமாளை வழிபட்டு யாகமொன்று செய்தார்கள். அவர்களுடைய யாகத்திற்கு மகிழ்ந்து ரங்கநாதப்பெருமாள் அவர்கள் முன்தோன்றி அவர்களை ஆசிர்வதித்தார். பெருமாள் கௌதமரைப் பார்த்து அருகா மையிலுள்ள துளசிச் செடிகளின் மத்தியிலுள்ள எறும்புப்புற்றினுள்ளே தான் சிலா ரூபமாக இருப்பதைத் தெரிவித்தார். அதன்படி கௌதமர் அந்தத் துளசிச்செடிகளின் புதர் மத்தியில் சென்று பிரம்மா ருத்திரர் இந்திரன் முதலான தேவர்களையும் காமதேனுவையும் வரவழைத்தார் தேவர்களும், முனிவர்களும் துளசிப்புதரின் மத்தியிலுள்ள, எறும்புப்புற்றைக்கண்டு தரிசித்து கீழேவிழுந்து நமஸ்கரித்தார்கள். காமதேனுவானது அந்த எறும்புப்புற்றின்மேல் தன்னுடைய பாலை வர்ஷித்து நனைத்து புற்றுமண்யாவும் கரைந்துபோனபோது எல்லா பக்தர்களும் எம்பெருமானை அந்த புண்ணிய காலத்தில் தரிசித்து சந்தோஷமடைந்தனர்

அவர்கள் தரிசித்த காலம் யாதெனில் மேஷ மாதம் சுக்கில பக்ஷம், சப்தமி திதி சனிக்கிழமையாகும்.

விஷ்வக்சேனர், கருடாழ்வார், சக்கரத்தாழ்வார் முதலிய தேவர்களை வணங்கியபோது வாயுமூலையான தென்கிழக்குப் பக்கத்தில் எம்பிராட்டி ரங்கநாயகியைக்கண்டு வணங்கினார்கள் பிறகு அந்த திவ்ய அரண்மனையை பிரதட்சிணமாக வலம்வந்து கர்ப்பகிரகத்தையடைந்து எம்பெருமானைக்கண்டு தரிசித்தார்.

ரங்கநாதப்பெருமாள் ஆதிசேஷன்மேல் சயனம்கொண்டுவலதுகையைத்தலைக்குவைத்தும் இடதுகையை நீட்டிக்கொண்டும் பிராட்டியார் மார்பகத்திலும் திருப்பாதங்களில் காவிரிதேவி அலங்கரித்துக்கொண்டும் புன்னகைபூத்த முகத்தோடு காட்சியருளினார். கௌதம முனிவரும் பிரம்மா, ருத்திரர் முதலான தேவர்களும் ஸ்தோத்தரிததனர். எம்பெருமான் அவர்கள் ஸ்தோத் திரததிற்கு மெச்சி இனி அந்த க்ஷேத்திரத்திற்கு கௌதம க்ஷேத்திரமென்றும் அந்த திருக்கோவிலுக்கு **'பிரம்மானந்த விமானம்'** என்றும் அழைக்கப்படுமென்று கூறினார்.

பிறகு நாரதமகரிஷியிடம் கௌதமர் **'பாஞ்சராத்திர'** வழிபாட்டு முறையைத் தெரிந்து கொண்டு அதன்படி எம்பெருமானை வழிபடலானார். முதன்முதலாக அப்படி வழிபட்ட அந்தப் புண்ணியதினம் இன்றளவும் ஸ்ரீ ரங்கஜெயந்தி என்று கொண்டாடப்பட்டு வருகிறது. அன்றைய தினம் எம்பெருமானுக்கு அபிஷேக ஆராதனைகள் நடைபெற்று பைராகியாக சேவைசாதித்

திருவுருவது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். கௌதம பூஜையும், மகா மங்களார்த்தியும் நடைபெறும். அன்றிரவு எம்பெருமான் ஸ்ரீரங்கமுடி அலங்காரத்துடன் திருவீதிகளில் உல வந்து சேவை சாதிப்பார்.

மறுநாளிலுருந்து கௌதமர் மற்ற ரிஷிகளுடன் ஸ்ரீங்க சப்தாஹம் ஒரு வாரத்திற்கு நடத்தினர், கடைசி நாளன்று எம்பெருமான் கருடாழ்வார்மேல்சேவை சாதித்தருளினர். இன்று கூடஷஷ்தினத்தில் கருடோத்ஸவம் கொண்டாடப்படுகிறது. அது பார்பதற்குப் பேரானந்தமாக இருக்கும்.

கௌதமருடன் வந்த மகரிஷிகள், அந்த க்ஷேத்திரத்தைப் பிரிய மனமில்லாது அங்கேயே தங்கி விடுவதென்று முடிவு செய்தார்கள். துலா மாதம் பிறந்தது. பல பரமாத்மாக்கள் தங்கள் பாபங்களைப் போக்கிக்கொள்ள கங்கை நதியில் ஸ்நானம் செய்ததால் தான் பெற்ற பாபங்களைப் போக்கிக்கொள்ள காவிரிநதியில் ஸ்நானம்செய்ய கங்கையானவள் இப்புண்ணிய துலா மாதத்தில் காவிரியில் கலந்திருப்பதாகக் கருதப்படுகிறது. அதனால் அவர்கள் இத்திவ்ய க்ஷேத்திரத்திற்கு துலா மாதத்தில் முக்கியத்துவம் கொடுத்து புண்ணிய க்ஷேத்திரமாகக் கருதி அதற்காக எம்பெருமானை வழிபட்டார்கள். எம்பெருமானும் அவர்களுக்கு தரிசனம்தந்து அவர்கள் இஷ்டத்தைப் பூர்த்தி செய்து-துலா மாதம். கிருஷ்ணபட்சம் தசமித்திதியன்று அப்புண்ணிய ஸ்தலத்திலுள்ள அஷ்ட தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்கிற பக்தர்கள் இஷ்ட பூர்த்தியாவதுடன் மோட்சத்தையும் அடைவார்கள் என்று கூறியருளினர்.

கங்காநதி தீரத்தில் மூன்று நாட்கள் தங்கியிருந்தாலும் யமுனை நதிக்கரையில் ஐந்து நாட்கள் தங்கியிருந்தாலும் காவிரி நதியில் ஒரு முழுக்கு ஸ்நானம் செய்தாலும் அவரவர்கள் செய்த பாபங்கள் பஞ்சாய்ப் பறந்துவிடுமென்பது சாஸ்திரம். காவிரியிலிருந்துவரும் காற்று ஒருவருடைய உடம்பில் பட்டால்போதும். அவருக்கு நிச்சயம் மோட்சம் உண்டு. அந்தநதியைப் பார்த்தாலும் பாப விநாசமாகும். அதனுல் கௌதம க்ஷேத்திரத்தில் இருந்து ஸ்நானம் செய்து தர்மம் செய்பவர்களுக்கு நித்தியமான பலனுண்டு.

இக்காவிரியில் துலா மாதத்தில் கங்கையானவள் தன் பாவங்கள் தொலைவதற்கு வாசம் செய்கிருள் தன்பக்தர்களின் பாபங்களைத் தீர்ப்பதற்காக ஸ்ரீ ரங்கநாதப்பெருமாள் இந்நதி சூழ்ந்த இப்புண்ணிய க்ஷேத்திரத்தில் ஆதிசேஷனில் பள்ளிகொண்டருளுகிருர். அதனுல் இந்த ஸ்ரீ ரங்கக்ஷேத்திரம் மிக முக்கியமானதும் விசேஷமானதுமாகும் இந்த க்ஷேத்திரத்தின் மகிமை கீழ்க் கண்டபடி விவரிக்கப்படுகிறது.

வேறு எந்த இடங்களில் செய்த பாபங்களாயினும் இந்த புண்ணிய க்ஷேத்திரத்திற்கு வந்ததும் திர்ந்துபோகும். ஆனுல் இந்த ரங்கக்ஷேத்திரத்தில் செய்த பாபகாரியங்களைத் தீர்த்து கொள்ள வேறு க்ஷேத்திரங்கள் கிடையாது இங்கேயேதான் போக்கிக்கொள்ள முடியும், அதனுல் க்ஷேத்திரத்திற்கு இங்கு எழுந்தருளியுள்ள ரங்கநாதப் பெருமாளுக்கும் உள்ள மகிமை வேறு எங்கும் இல்லை.

முன்னொரு காலத்தில் கந்தர்வ அரசர்களான சித்திரசேனன் சித்திரரதன் என்பவர்கள் இந்திரனுடைய மனைவியான சசிதேவியின்மேல் ஆசைப்பட்டார்கள். அது தெரிந்ததும் இந்திரனால் அவர்கள் சபிக்கப்பட்டு இராட்சசர்களாயினர்.

அவர்கள் இருவரும் கௌதம க்ஷேத்திரத்திற்கு வந்து துலாமாதம் பௌர்ணமியன்று காவிரிநதியில் ஸ்நானம் செய்து ரங்கநாதப்பெருமானை தரிசித்தமாத்திரத்தில் அவர்கள் பாபங்கள் நீங்கி சாபமும் நீங்கி சுய ரூபத்தோடு தேவலோகம் சேர்ந்தார்கள்.

ரங்கநாதப் பெருமானுடைய இம்மஹாத்மியம் பொருந்திய புண்ணிய புராணத்தை ஸ்ரீ பரமேச்வரன் நாரத மகரிஷிக்குக் கூறியருளினார். இதைகேட்ட நாரத மகரிஷியானவர் புளகாங்கிதமடைந்து எம்பெருமானைஸ்தோத்தரித்து, சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தார் இந்தப் புண்ணிய புராணத்தைப் படிப்பவர்கள், கேட்பவர்கள் யாவரும் எம்பெருமானின் கிருபைக்குப் பாத்திரர்களாகிய, மோட்ச சாம்ராஜ்யத்தை அடைவார்கள்.



# ஸ்ரீரங்கப்பட்டிணத்திலுள்ள அரங்கநாதப்பெருமாள் கோயிலின் மகாத்மியம்



ஒரு காலத்தில் ஸ்ரீரங்கப்பட்டணம் என்பது ஸ்ரீரங்கபுரி என்றும் பிறகுலக்ஷோத்பானபுரி என்றும் வழங்கப்பட்டு, கடைசியாக ஸ்ரீரங்கப்பட்டணம் என்று வழங்கப்படுகிறது. இது நாற்புறமும் காவிரிநதியால் சூழப்பட்டுள்ளது. இந்நகரத்தில் ஸ்ரீரங்கநாதர், ஸ்ரீ லட்சுமி நரசிம்மம், ஸ்ரீகங்காதரேச்வரர், ஸ்ரீஜோதிர்மானேச்வரர் முதலானவர்களுக்குத் தனித்தனி ஆலயங்களிருக்கின்றன. இவையன்னியில் வேறு சிறுசிறு கோயில்களும் உண்டு. இவற்றுள் பிரதானமானது ஸ்ரீரங்கநாதர் ஆலயம்.

இவ்வாலயத்தின் உட்பகுதி கி. பி. 817-ல் தாசி குலத்திலுதித்த ஹம்பி என்பவளால் கட்டப்பட்டது. கி, பி. 894-ல் அப்பட்டணத்தை ஆட்சிபுரிந்த கங்கைவம்சத்தில் வந்த திருமாலையா என்பவரால் நவரங்க மண்டபமும், திருமால் என்னும் சீனிவாசப்பெருமாளுக்கு மகாத்துவாரத்தின் இடப்பாகமாக ஒருகோயிலும் கட்டப்பட்டது. கி.பி.1117-ல் சோழநாட்டிலிருந்து இங்கு வந்து சேர்ந்தார் ராமாநுஜர். இங்கு அரசாட்சி செய்துகொண்டிருந்த ஜைன சமயத்தரசனுன **ஹோய்சாலபிட்டிதேவன்** என்பவனை வைஷ்ணவனுய்ச் செய்து அவனுக்கு **விஷ்ணுவர்த்தனநாராயணன்** என்று பெயரும் சூட்டியருளினுர். இந்த அரசனிடமிருந்து

எட்டு கிராமங்களையும் திரண்டசெல்வங்களையும் தானமாகப் பெற்றார். இந்தச் செல்வங்கள் யாவற்றையும் ஸ்ரீரங்கநாதப்பெருமாளின் கைங்கர்யத்திற்காக அர்பணித்து இவற்றைக் கண் காணித்து நிர்வகிப்பதற்காக பிரபுக்கள் அல்லது ஹெப்பர்கள் என்னும் ஒரு சிலரை நியமனம் செய்துவைத்தார். கி,பி, 1457-ல் அப்போது ஹெப்பராக இருந்த **திம்மண்ணு** என்பவர் விஜய நகரம் சென்று அங்கு அரசவையில் தனநாயகர் உத்தியோகத்தில் அமர்ந்தார். அவர் விஜய நகரத்திலிருந்து திரும்பி வந்த பிறகு இந்நகரத்தின் கோட்டை வெளிப்பகுதியையும், மதில் சுவரையும் முன்புற பெரியவாசலையும் கட்டுவித்தார்,

பின்னுளில் இந்நகரம், விஜயநகர ராஜனின் நேர்பார்வையில் கவனிக்கப்பட்டு வந்தது அரசனின் பிரதிநிதியாக இருந்தவரில் ஒருவரான ஸ்ரீரங்கராயர் என்பவரால் இந்நகரம் விஸ்தரிக்கப்பட்டுஉட்பிரகாரமும் பெரிய வாசலுக்கு ஐந்துபடிக்கட்டுகளும் இருபுறமும் இரண்டு பெரிய கருங்கல் யானைகளும் கட்டப்பட்டன. அவருடைய மனைவி அலர்மேலம்மாள் என்பவர் பெரிய பக்தரும் உத்தமியுமாவர்.

அவளால் பல ஆபரணங்கள் தாயாருக்குச் செய்து வைக்கப்பட்டு வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளில் தேவியாருக்கு அலங்காரம் செய்து அலர்மேலம்மாள் தரிசனம் செய்வது வழக்கம்,

ஸ்ரீரங்கராயருக்கு முதுகில் ஒரு பெரிய சிரங்கு வந்து உடல் நலமில்லாமல் வருந்தியபோது கோயில் நிர்வாகத்தைத் தான் பார்க்கமுடியாமல் போயிற்று. அவருக்கு சந்ததிகள் இல்லை

அப்போது மைசூரை அரசாண்ட ராஜ உடையார் வியாபகராய் இருந்து வந்தமையால் அவரை வரவழைத்து அவரிடம் தன் நிர்வாகப்பொறுப்பை ஒப்படைத்தார். பிறகுதான் தலைக்காடு என்னும் இடத்திற்கு அருகேயுள்ள மாலங்கி என்ற இடத்திற்குச்சென்று சிறிதுகாலமிருந்து இறந்து போனார்.

ஸ்ரீரங்கராயர் இறந்துபோன பிறகும் வெள்ளி, செவ்வாய்க்கிழமைகளில் தாயாருக்கு ஆபரணங்கள் அலங்காரம்செய்து தரிசிக்கும் வழக்கம் இருந்துவந்தது. ஒரு வெள்ளிக்கிழமையில் ஸ்ரீராஜ உடையார் தாயார் சந்நிதிக்கு தரிசனத்துக்கு வந்தார் அப்போது தாயாருக்கு அலங்கரிக்கப்பட்ட ஆபரணங்கள் கழற்றப்பட்டு அப்போதைக்கப்போது அலர்மேலம்மாளிடம் கொடுக்கப்படவேண்டுமென்பதை அறிந்து அப்படிச்செய்யாமல் எப்போதுமே தாயாருக்கு அலங்கரிக்கப்படவேண்டுமென்று கட்டளையிட்டார். ஆனால் அப்போது சில நகைகள் அலர்மேலம்மாளிடம் கொடுக்கப்பட்டுவிட்டன. அவற்றைத் திருப்பித்தர வேண்டுமென்று அரசர் கேட்டபோது அலர்மேலம்மாள் தான் இனி இங்கிருப்பது சரியல்லவென்று எண்ணித் தலைக்காடு என்னுமிடத்திற்குக் குதிரையின்மேல் சென்றுவிட்டார் அவர்களைப்பின் தொடர்ந்து சில சிப்பாய்களும் சென்றார்கள். இதையறிந்த அவள், சிப்பாய்களிடமிருந்து தப்பித்துக்கொள்ள மாலங்கியிலுள்ள காவிரிநதியில் குதித்துவிட்டார் அந்த இடம் ஆழமுடையது. குதிக்கும்போது தலைக்காடு என்னும் பகுதி மணற்காடாகப்போகட்டும் மாலங்கிநதி அண்டமுடியாத ஆழமாகட்டும்மைசூர் அரசர்களுக்குக்குழந்தைகள் இல்லாதுபோகட்டும் என்று

சபித்துவிட்டுக் குதித்தாள். உடனே மாலங்கநதி அதி ஆழமாய்ப்போனது. சுற்றுப்பகுதிகள் யாவும் மணல்களாகப் போய்விட்டது. சிப்பாய்கள் அலர்மேலம்மாளைக் காணமுடியவில்லை. இன்றும் இந்த உண்மையை யாவரும் காணலாம்.

இது விஷயங்களை அறிந்த மைசூர் அரசர் ஸ்ரீ ராஜ உடையார் மிகவும் வருத்தமுற்று தன் அரண்மனையில் அலர்மேலம்மாளுக்குச் சிலை எழுப்பி வழிபாடுசெய்ய ஏற்பாடு செய்தார். இந்த விழா தசராவின்போது மிக்க சிறப்பாக இன்றளவும் நடைபெற்று வருகிறது. கோயிலிலுள்ள துவாரபாலகரின் பக்கம் ஸ்ரீரங்கராயர், அலர்மேலம்மாள் இவர்கள்சிலைகள் இருப்பதை யாவரும் காணலாம்,

அலர்மேலம்மாளால் கொடுக்கப்பட்ட மூக்குத்தி என்ற ஆபரணம் இப்பொழுதும் பார்க்கலாம். முதலில் இந்த மூக்குத்தி ஒரு எலுமிச்சைப் பழம் அளவு பெரிதாயிருந்ததாகவும் நாளடைவில் அதன் பருமன் குறைந்துவிட்டதாகவும் கூறப்படுகிறது.

கி. பி. 1610 முதல் 1699 வரையில் ஸ்ரீரங்கப்பட்டணம் மைசூர் ராஜ்யத்தின் தலைநகரா யிருந்தது. கி பி. 1760-61 வருஷத்தில் அப்போதுள்ள மைசூர் அரசர் ஸ்ரீ இம்மடி கிருஷ்ணராஜ உடையார் ஹைதர் அலி என்பவரைத் தன்படைத்தலைவனாக நியமனம் செய்தார் ஹைதர்கனவில் ஸ்ரீரங்கநாதர்தோன்றி அவரோடு உரையாடியதாகவும் அதனால் அவர் ஸ்ரீரங்கநாதரின் பக்தரா யிருந்ததாகவும் கூறப்படுகிறது. ஹைதர் எந்தவிதமான முக்கிய வேலைகளைத் தொடங்குவதா

யிருந்தாலும் ஸ்ரீரங்கநாதரின் உத்தரவு கேட்டுத்தான் செய்வாராம். இதுபற்றி ஒரு கர்ண பரம்பரை வரலாறும் உண்டு.

என்னவென்ருல், ஒருசமயம் மைசூர் எல்லேக்குள் எதிரிகள்படை நுழைந்தபோது ஹைதர் தன்படைகளோடு எதிரிகளேத் தாக்கப் புறப்பட்டார். அப்போது எதிரிகளின் பலம் அதிகமா யிருந்தது. ஹைதரின் படைகள் கோதாவரி நதியின் கரைக்கும் எதிரி படைகளுக்கும் மத்தியில் சிக்கியிருந்தது. ஹைதர் இந்த சமயத்தில் என்ன செய்வதென்று புரியாமல் தவித்தார். அந்த நெருக்கடியான சமயத்தில் ஸ்ரீரங்கநாதப்பெருமாளே தியானம் செய்தார். உடனே கோதாவரி நதி தண்ணீர் எல்லாம் வற்றி வரண்டுபோனது. உடனே ஹைதரின் சேனேகள் நதியைக் கடந்து இக்கரைக்கு வந்தன, அவர்களே எதிரிப்படைகள் துரத்திவந்தபோது கோதாவரியில் வெள்ளம் பெருகி எதிரிகளின் படைகள் ஆற்றைக்கடக்க முடியவில்லே. ஹைதர் தன் படைகளோடு பத்திரமாய்த் திரும்பி ஸ்ரீரங்கப்பட்டணம் வந்து ஸ்ரீரங்கநாதப்பெருமாளுக்குப்பூஜைகள் செய்து பிறகு தன் படைகளோடு திரும்பிப்போய் எதிரிப்படைகளை முறியடித்து வெற்றியுடன் திரும்பிஞர், ஹைதருக்கு ஸ்ரீரங்கநாதப்பெருமாளிடமுள்ள பக்திக்கும்அவருடையபெருமைக்கும் இது ஒரு எடுத்துக்காட்டாகும்.

ஒவ்வொரு வருஷமும் தனுர் மாதம் 21ந் தேதி முதல் கோதாரோத்ஸவம் விமரிசையாக கொண்டாடப்படுகிறது இவ்விழாவுக்காக பிரம்மாண்டமான கோதாரம்ஒன்று கட்டப்பட்டிருக்கிறது,இவ்வுத்ஸவ காலங்களில் இம்மண்டபம் தோரணங்களாலும் பல வர்ணவிளக்குகளாலும் அலங்கரிக்கப்பட்டு பிரமாதமான காட்சியாக இருக்கும். இது ரங்கமஹாலில் உள்ளது.

இக்கோதாரோத்ஸவத்தில் தினந்தோறும் அரச குடும்பத்தினர் வந்து தர்சிப்பார்கள் ஒன்பதாவது நாளன்று மகாராஜாவே வந்து தரிசிப்பார். அன்றையதினம் மோகினி அலங்காரம் செய்யப்படும். அன்று பெயர்போன சங்கீத வித்வான்களின் கச்சேரிகள் நடைபெறும். நடனங் களும் இருக்கும். அவ்விழாவிற்கு மைசூர் மகாராஜா, அவர் குடும்பத்தினர் ஹைதர் அவருடைய அந்தப்புறப்பெண்கள் யாவரும் வருவார்கள்.

கி. பி. 1774.ல் கோதாரோத்ஸவம் நடைபெற்ற 8-வது நாளில் திடீரென்று பந்தலில் தீப்பிடித்துக்கொண்டது. அரசர் மிக்கக் கவலைகொண்டு வருந்தினர். அரசரின் வருத்தத்தை அறிந்த ஹைதர் உடனே அதே இடத்தில் கருங்கற்களாலான மண்டபம் ஒன்று கட்டுவிக்கும்படி தன் ஆட்களுக்கு உத்தரவிட்டார். மறுநாள்உத்ஸவம்நடத்துவதற்குஅம்மண்டபம்தயாராயிற்று அன்றுமுதல் அம்மண்டபம் பாதாளமண்டபம் என்று அழைக்கப்பட்டு வருகிறது, இன்றளவும் இப்பாதாள மண்டபத்தில் தான் கோதாரோத்ஸவம் நடைபெற்றுவருகிறது.

கி.பி. 1882-ல் ஹைதர் இறந்தபிறகு அவருடைய மகன்திப்பு படைத்தலைவனுனன். அவன் தலைவனுனஒருசிலநாட்களில் அரசனைத்துரத்திவிட்டுத்தானே சிம்மாசனமேறி சுல்தானுனன் அப் போது மும்முடி கிருஷ்ணராஜ உடையார் 5வயது சிறுவனுயிருந்தார். முஸ்லிம்களிடமிருந்து காப் பாற்ற அவர் கோபுரத்தின் 5-வது மாடியில் மறைத்துவைத்துக் காப்பாற்றப்பட்டிருந்தார் திப்பு சுல்தான் ஆட்சிக்கு வந்த பிறகு அவருடைய சமஸ்தானத்தில் மீர் சாதிக் என்பவர் செல்வாக்

குடையவரானுர். அவர் லட்சுமிநரசிம்மசுவாமிகோவில், ச்வேதவராக சுவாமிகோவில். கங்காதரஸ்வாமி கோவில் போன்ற பல கோவில்களை நாசப்படுத்தி அழித்தார். இப்படி நாசமாக்கப்படுவதை அறிந்த பல நிர்வாகஸ்தர்கள் அவரவர் கோயில்களின்மேல் வீடுகளைப்போல் கூரை வேய்த்து கோயில் என்பது தெரியாமல் செய்தனர். அவற்றுள் ஒன்றுதான் இப்போது பூர்ணையா தெருவிலுள்ள ஜனார்த்தன ஸ்வாமிகோயில்.

சில கோயிலிலுள்ள அர்ச்சகர்கள் அவரவர்கள் கோயிலிலுள்ள விக்ரங்களைக்கொண்டு வந்து ஸ்ரீரங்கநாதப்பெருமாள் கோயிலில் பிரதிஷ்டைசெய்தார்கள். அவைகள்தான் கிருஷ்ணன் பட்டாபிராமன், குழல் ஊதும் கோபாலகிருஷ்ணன் ஆகும், இத்திருவுருவங்கள் கண்ணுக்கினிய அழகு பொருந்தியவையாகும். ஹைதர் தன் வாழ்நாளில் மிக்க அக்கரையோடு கவனித்து வந்ததால், எவரும் ஸ்ரீரங்கநாதப்பெருமாள் கோயிலுக்கு எவ்விதத்தீங்கும்செய்யத்துணியவில்லை

ஆங்கிலேயர்களோடு சண்டைசெய்து திப்புசுல்தான் தோற்றுன். ஆங்கிலேயர்களுக்கு அவன் பெருந்தொகை கப்பங்கட்ட வேண்டியதாயிற்று. அவனிடம் தொகையில்லாததால் கோயிலில் உள்ள திருவாபரணங்களை எடுத்து ஆங்கிலேயர்களுக்குக் கொடுத்தான். அவற்றுள் சில பிற்காலத்தில் பிரஞ்சுக்காரர்களின் கைக்குப்போய் அவர்களிடமிருந்து ரஷ்யர்களிடம்போய் விட்டது. அவற்றை இன்றும் கிரம்ளின் மாளிகையில் காணலாம்.

மீதமுள்ள ஆபரணங்கள் ஸ்ரீரங்கநாதப்பெருமாளுடையவையாகும். இவை திப்புவால் வழங்கப்பட்டவை என்பார்கள்.

கி.பி,1799-ல் ஸ்ரீரங்கப்பட்டணம் ஆங்கிலேயர் கைக்கு வந்தபோதுமும்மடிகிருஷ்ணராஜ உடையார் மைசூரைத்தலைநகரமாக்கிக்கொண்டுபூர்ணையா என்பவரைத்தன் ராஜ்யத்தின் திவானாக நியமித்தார். அரசர் பின்னர் வழக்கம்போல்கோரோத்ஸவத்தின் 9-வதுநாளில் தரிசனம் செய்துவந்தார். இதுவன்னியில் தான் பிறந்த ஊரில் ஒரு மண்டபம் நிர்மாணம் செய்து அங்கு சுவாமியை எழுந்தருளச்செய்தும் வந்தார் பிற்காலத்தில் 4-வது கிருஷ்ணராஜ உடையார் என்பவர் ஸ்ரீ சாமராஜேந்திரர் நினைவாக ஒரு சத்திரத்தையும் கட்டுவித்தார். மற்றும் தன் தகப்பனாரின் ஞாபகார்த்தமாகக் காவிரி நதியில் எல்லோரும் சௌகர்யமாக இரங்கி ஸ்நானம் செய்வதற்கு ஒரு படிக்கட்டும் கட்டுவித்தார். இந்த இடம் தான் இன்று 'ராஜ்காட்' என்று வழங்கப்படுகிறது மும்மடி கிருஷ்ணராஜ உடையாரால் முதன்முதல் கட்டப்பட்ட மண்டபம் பெரிதாக விஸ்தரிக்கப்பட்டு கடவுளின் பூஜைக்காக பூந்தோட்டங்களும் துளசித்தோட்டங்களும் உண்டாக்கப்பட்டண கிருஷ்ணராஜஉடையார் பிறந்ததினமான ஆஷாடபஹுள பிடிகைதினத்தன்று ஸ்ரீரங்கநாதப்பெருமாள் இம்மண்டபத்துக்கு எழுந்தருளுவது வழக்கம். அந்தத்திருநாளை சக்கரைப்பொங்கல் திருவிழா என்றழைப்பார்கள். ஸ்ரீஜெயசாமராஜ உடையார் பட்டத்திற்கு வந்தபிறகு 1953-54 வரையிலும் இத்தியாதிஉத்ஸவங்கள்கொண்டாடப்பட்டன இந்தஉத்ஸவ காலங்களில் சமஸ்தான வித்வான்கள் முதலிய யாவரும் கலந்துகொள்வார்கள். பல திருக்

கோயில்களைக்கொண்ட பெரிய யாத்திரை புண்ணிய ஸ்தலமாக ஸ்ரீரங்கப்பட்டணம் விளங்கி வருவதால், பல யாத்ரிகர்கள் விஜயம் செய்து போகிறார்கள்.

ஸ்ரீரங்கநாதரின் இத்தியாதி பெருமையையும், காவிரி நதிதீர்த்தத்தின் பெருமையையும் கேள்விப்பட்ட யார்தான் இந்த க்ஷேத்திரத்திற்கு வந்து காவிரி தீர்த்தமாடி எம்பெருமானை சேவிக்க ஆசைப்பட மாட்டார்கள்? இந்துக்கள் யாவரும் இகபர சுகம் கிடைத்து மோட்ச் சாம்ராஜ்யத்தை அடைவதற்கு இந்த க்ஷேத்திரத்திற்கு அவசியம் வரவேண்டும்.



# கர்நாடக ராஜ்யத்தில் பார்க்கத்தக்க இடங்கள்



**பெங்களூர் நகரம்**—இந்நகரம் கர்நாடக அரசாங்கத்தின் தலைமை அலுவலகங்கள் நிறைந்துள்ளது. இது கர்நாடக ராஜ்யத்தின் முக்கிய நகரமுமாகும்.

1) விதானசௌதா, 2) பழையகோட்டை, 3) லால்பாக், 4) இந்தியன் டெலிபோன் தொழிற்சாலை, 5) தொல்பொருட்காட்சி (Museum) 6) பாரத்எலக்ட்ரானிக்ஸ் தொழிற்சாலை 7) அரசினரின் சோப்புத் தொழிற்சாலை, 8) அரசினரின் பீங்கான் தொழிற்சாலை (Porcelain factory) 9) மைசூர் மின் விளக்குத் தொழிற்சாலை, 10) ஹிந்துஸ்தான் ஆகாயவிமானத் தொழிற்சாலை 11) ஹிந்துஸ்தான் மிஷின் டூல்ஸ் தொழிற்சாலை, 12) ரேடியோ எலக்ட்ரிக் தொழிற்சாலை முதலிய அற்புதமான இடங்கள் பெங்களூர் நகரிலுள்ளன.

**நந்திமலை**— இம்மலை பெங்களூர் நகரத்தலிருந்து 38 மைல் தொலைவிலுள்ளது. இது கடல் மட்டத்திற்கு 4,850 அடி உயரத்திலிருக்கிறது. இம்மலை உச்சியில் எல்லாவிதமான வசதிகளோடு கூடிய பங்களாக்களும் குடில்களும் இருக்கின்றன. சௌகரியமான உணவு விடுதிகளும் உண்டு இது ஒரு சுகாதார ஸ்தலமுமாகும்.

ஹம்பி-இந்நகரம் பெல்லாரி மாவட்டத்தில் பெல்லாரி என்ற ஊருக்கு 40மைல் தொலை விலும் ஹாஸ்பெட் என்ற ஊருக்கு 9மைல் தொலைவிலும் உள்ளது. பழைய விஜயநகர சாம்ராஜ்யத்தின் தலைநகராயிருந்தது. இங்கு விழ்ந்துபோன விஜயநகர சாம்ராஜ்யத்தின் சின்னங்கள் பலவற்றைகாணலாம்.. கர்நாடகப் பகுதியில் ஹம்பி முக்கியமான இடமாகும். இதன் புகழ் உலகெங்கும் பரவியுள்ளது. மறைந்துபோன விஜயநகர சாம்ராஜ்யத்தின் ஏற்றம் மாட்சி, வீழ்ச்சி இவை இந்திய சரித்திரத்தின் முக்கிய பகுதியாகும்.

## அடியிற்கண்ட இடங்கள் ஒவ்வொருவரும் பார்க்கவேண்டியவை

1) பெரியதராசு, 2) விட்டலசுவாமி கோயில், 3) கிருஷ்ணசுவாமி தேவாலயம் 4) உக்கிர நரசிம்மர், 5) தசராதிப்பம், 6) ஹசரா ராமசாமி கோயில், 7) தாமரை மகால் (லோட்டஸ் மகால்), 8) ராணிகட்டம், 9) ஹம்பி கடைத்தெரு (Hampi Bazar), 10) யானைகட்டுமிடங்கள்.

**மைசூர்நகரம்—** இது இந்தியாவின் நந்தவனம் எனப்பெயர் பெற்றது. இது பெங்களூரிலிருந்து 86 மைல் தொலைவிலுள்ளது. கடல் மட்டத்திற்கு 2.525அடி உயரமுடையது ஒவ்வொரு வருஷமும் செப்டம்பர் அக்டோபர் மாதங்களில் நடைபெறும் தசரா திருவிழாவின் போது இந்தியாவின் எல்லாப் பகுதியிலிருந்தும் ஜனங்கள் கூடி மகிழ்வார்கள்.

அரண்மனை, சித்திரசாலா என்னும் ஜகன்மோகன் அரண்மனை, சர்ம ராஜேந்திர டெக்னிகல் இன்ஸ்டிடியூட், அரசினர் சந்தனத்தைல உற்பத்தித் தொழிற்சாலை. அரசினர் பட்டு உற்பத்தித் தொழிற்சாலை, மத்ய உணவு ஆராய்ச்சி நிலையம் உயிர்ப் பொருட்காட்சி லலிதா மஹால் தண்டி சூதக் சாமுண்டிமலை, இராஜேந்திர விலாஸ் அரண்மனை, நந்தி முதலியன பார்க்க வேண்டிய இடங்களாகும்.

**ஸ்ரீரங்கப் பட்டணம் :** இந்நகரம் மைசூரிலிருந்து 10 மைல் தூரத்திலிருக்கிறது. இது காவிரி நதியின் மத்தியிலுள்ள தீவு ஆகும். திப்புசுல்தான் காலத்தில் இது கோட்டையாக இருந்தது. ஒரு காலத்தில் இது மைசூர் அரசர்களின் தலைநகராகவுமிருந்தது ஒப்புநோக்கும் போது இந்த இடம் அதிக அழிவில்லாமலுமுள்ளது.

**யாத்ரீகர்கள் பார்க்க வேண்டியவை :** 1) ரங்கநாதசுவாமி திருக்கோவில், 2) இருட்டு மாளிகை (Dungeon), 3) திப்பு இறந்த ஸ்தலம், 4) பெரிய பள்ளி வாசல், 5) திப்புவின் கோடை வாசஸ்தலமான தரியா தௌலத் பாக், 6) திப்பு அவர் தகப்பனார் தாயார் இவர்கள் சமாதிகள் உள்ள கும்பாஸ் என்ற இடம், 7) பிரிந்த காவிரி இரண்டும் ஒன்று சேரும் சங்கமம்

**கிருஷ்ணராஜ சாகர் அணை :** இது மைசூரிலிருந்து 10மைல்தூரத்திலிருக்கிறது, அணையின் பக்கத்தில் அழகான பூங்காவனங்கள் நிரம்பியுள்ளன. இவற்றிற்கு பிருந்தாவனம் என்று

பெயர். பச்சைப் பசேலென்ற புல் தரைகளும், அற்புதமான வண்ணப் பூக்களும் மணம் வீசும் மலர்களும், நிழல் தரும் மரங்களும் பன்னீரென நீர் பூச்சு ஊற்றுகளும் களைப்பாறும் மேடைகளும் எங்கும் நிறைந்து காட்சியளிக்கும். இப்பூங்காவனம் புதன் சனி, ஞாயிற்றுக் கிழமைகளில் பலவர்ணவிளக்குகளால் மாலையிலும் முன்னிரவிலும் அலங்கரிக்கப்பட்டு, பார்க்கக் கண்கொள்ளாக்காட்சியாக விளங்கும்.

**சோமநாதபுரம்** : இது மைசூரிலிருந்து 23 மைல்கள் தூரத்திலிருக்கிறது. கலைவுள்ளம் படைத்த மக்களுக்கு இது விருந்தளிக்குமிடமாகும். இங்குள்ள ஒரு கோயிலில் பிரமாதமான வளைவுகளுள்ள மண்டபங்களும் சிற்பக்கலை விளக்கும் உருவங்களும் நிறைந்துள்ளன. ஹோய் சாலா வகையைச் சேர்ந்த கோயிலாகும் இது.

**பேலூர்** ஹாஸன் என்ற ஊரிலிருந்து 24 மைல் தொலைவில் இவ்வூர் இருக்கிறது ஹோய்சாலவம்சத்தில் வந்தவிஷ்ணுவர்த்தனன் என்பவனுல்கட்டப்பட்ட பெயர்போன சென்ன கேசவப் பெருமாள் கோவில் இருக்கிறது. அழியாப் புகழ்பெற்ற கலைச்சிற்பி ஜகந்நாதாசாரி என்பவனுல் செதுக்கப்பட்ட கோயில் சிற்பங்களின் அழகே அழகு.

**ஹலிபித்து** : இந்நகரம் ஒரு காலத்தில் ஹோய்சால வம்ச அரசர்களுக்குத் தலைநகரா யிருந்தது. சிற்பக்கலைக்குச் சிறந்து விளங்கும் ஒப்பற்ற ஹோய்சாலேச்வரம் என்னும் திருக் கோயில் இங்குதான் இருக்கிறது.

**ச்ரவண பேலகோலா :** இந்த இடம் மைசூரிலிருந்து 60 மைல் தூரத்திலும் ஹாசன் என்ற ஊரிலிருந்து சாலே வழியாக 32 மைல் தூரத்திலும் இருக்கிறது. முன் காலத்தில் சந்திர குப்தமௌரியன் என்ற அரசன் துறவறம் பூண்டு இந்த இடத்தில் தான் ஒரு குகையில் சந்நியாசியாய் வாழ்ந்து இறந்தான் என்று கர்ண பரம்பரையாய் கூறுவார்கள். இங்குள்ள ஒரு உயரமான குன்றின்மேல் 60 அடி உயரமுள்ள ஓரே கல்லில் செதுக்கப்பட்ட ஜைன முனிவரான கோமதீச்தரருடைய சிலே இருக்கிறது,

**சிவசமுத்திர நீர்வீழ்ச்சி** மைசூரிலிருந்து 50 மைல் தூரத்தில் இந்நீர்வீழ்ச்சி இருக்கிறது இங்குதான் நீர்மின்சார நிலேயம் அமைக்கப்பட்டிருக்கிறது இந்த இடத்தில் காவிரிநதி இரண்டு கிளேகளாகப் பிரிந்து 200 அடி உயரத்திலிருந்து வீழ்கிறது. இது வீழ்கின்றபோது பார்ப்ப தற்கு ரமணீயமான காட்சியாயிருக்கும்.

**ஜோக் நீர்வீழ்ச்சி :** இது தலகுப்பா என்ற இடத்திலிருந்து 7மைல் தூரத்திலிருக்கிறது இந்த இடத்தில் ஷாராவதி என்ற ஆறு நான்கு கிளேகளாக ராஜா, ரோரர், ராக்கட்டு ராணி என்ற பெயர்களோடு 800 அடி உயரத்திலிருந்து கம்பீரமாக வருஷமுழுவதும் வீழ்ந்து கொண்டிருப்பது அற்புதமான காட்சி, கர்நாடக ராஜ்யத்திற்குப் பெரும்பகுதி மின்சாரம் இங்குதான் உற்பத்தியாகிறது. இந்நிலேயம் மகாத்மாகாந்தி நீர்மின்சார நிலேயம் என்று கூறப்படும்.

**பண்டிப்பூர் :** மைசூரிலிருந்து 48 மைல் தூரத்தில் இந்நகரம் இருக்கிறது. இங்கு வன விலங்குகள் வாழும் பாதுகாப்பான இடமுள்ளது. காட்டானைகள், காட்டெருமைகள், புள்ளி மான்கள் அவையவை கூட்டமாயும், தன் பிணைகளோடும் ஓடித்திரிவதை அண்மையில் நின்று காண்பது மகிழ்ச்சியாயிருக்கும்.

**தலைக்காவிரி :** மைசூரிலிருந்து 120 மைல் தூரத்திலும் மெக்காரா என்னுமிடத்திலிருந்து 25மைல் தொலைவிலும் இவ்விடம் இருக்கிறது. ஒவ்வொரு வருஷமும் அக்டோபர் மாதத்தில் துலா சங்க்ரமண தினத்தில் இங்கு வந்து தரிசிப்பது மிகப்புண்ணியம் என்று கருதுகிறார்கள் இங்குள்ள ஒரு சிறு தடாகத்தில் தான் காவிரிநதி உற்பத்தியாகிறது

**சிருங்கேரி :** கோப்பா என்னுமிடத்திலிருந்து 15 மைல் தூரத்தில் துங்கா என்ற நதியின் கரையில் இப்புண்ணிய ஸ்தலமிருக்கிறது. இந்த இடத்தில் தான் சமயாச்சாரியாரான ஸ்ரீசங்கரர் தன்னுடைய முக்கியமான மடாலயம் ஒன்றை நிறுவியுள்ளார்.






